உ

முருகன் துணை.

திருச்செந்தூர்

# முருகன்புகழ் பாமாலை.



சாத்தூர் சு. சண்முகம்பிள்ளை

வேண்டுதற்படி

ஸ்ரீவில்லிபுத்தூர் முன்சிப்கோர்ட் அமீனு

...ஷ்ணய்யர் பாடியதை

...ரியாவிலாஸ அச்சாபீசில்

...சப்பட்டது.

...912.




உ

முருகன் றுணை.

திருச்செந்தூர்

# முருகன்புகழ் பாமாலை.





சாத்தூர் சு. சண்முகம்பிள்ளை
வேண்டுதற்படி
ஸ்ரீவில்லிபுத்தூர் முன்சீப்கோர்ட் அமீனு
நவநீதகிருஷ்ணய்யர் பாடியதை

சாத்தூர் சுப்பிரமணியவிலாஸ அச்சாபீசில்
பதிப்பிக்கப்பட்டது.
1912.

உ

முருகன்றுணை.

# முருகன்புகழ்பாமாலை.

## விநாயகர் வணக்கம்.

சீர்மேவுஞ்சாத்தூரில்
சிறந்திலகுந்தும்பிகையார்
பார்மேவும்நகரெல்லாம்
பிரபல்லியத்தைதங்கரனே
கார்மேவும்மேனிசித்தி
கணநாதத்தோர்கொம்பா
பேர்மேவும்நின்னிளையோன்
பெருமைசொல்லக்காப்பாமே.

## ஸரஸ்வதி வணக்கம்.

நான்முகனுர்நாயகியே
நாவிலிசைகொண்டவளே
மீன்வடிவுக்கொத்தழகு
மிகநெடிகூர்கண்மணியே

தேன்மாரி சொற்சொரியுந்
 தேவிஸரஸ்வதியே
மான்மருகன்மாலைபாட
 மாதரசேகாப்பாமே.
பொன்னுலவுசெந்திநகர்
 பொருந்தும்ஞானபண்டிதவேள்
மின்னலொளிமேனிவுயர்
 முனிவருள்ளம்வாழ்முதலே
பன்னிருகையாறுமுகா
 பரிமளானந்தகுகா
நின்னடிமைசண்முகன்சொல்
 நிஜமாலையேற்பாயே. (1)

மாமாலையானபல
 மணம்வீசக்கோர்த்ததிரு
பூமாலைநின்மார்பில்
 புகழ்ந்திடுவராயிடினும்
ஆமாலைவாடுமென
 அற்புதாநின்னிசையால்
பாமாலைசாற்றுமெனைப்
 பரிபாலித்தாளுவையே. (2)

மந்தாரைபிச்சிமல்லி
　மணக்குமிருவாட்சிமகிழ்
செந்தாமரை தாளை
　செண்பகங்கதம் பந்தும்பை
தந்தார் மனமுலவுந்
　தற்பரா வுனைத்தேடி
வந்தாரில்யானுமொன்றே
　வரமளித்தருள்வாயே. (3)

வண்டாடும்நன்மலரும்
　வாஸமரிக்கொழுந்தை
கொண்டாடிநின்மார்பில்
　கோரிடுவர் தங்களுக்கே
உண்டாமிகமும்பரம்
　வுயர்வாழ்வுந்தானமைக்கும்
தண்டாயுதை யாவென்
　றகைதீர்ப்பாயிவ்வேளை. (4)

ஆதியந்தமற்றோனே
　அமரரிடர்தீர்த்தோனே
சோதிமயமானவனே
　சோமன்றெளிதன்முகவா

மேதினியிலெங்கும்புகழ்
  மெத்தமுளங்கப்பெற்ற
நாதனேயென்றேவை
  நல்குவாய்வேலோனே
துய்யவெண்மலர்மாலை
  துலங்கணியும்மேனியனே
வையகமும்நான்மறையும்
  வணங்குஞ்செயலேற்றோனே
தையல்வள்ளிதெய்வானை
  தங்களுக்குகந்தவின்ப
மையல்கொண்டமான்மருகா
  மனக்குறையைத்தீர்ப்பாயே (6)

அத்திமுகமத்தகன்றன்
  னனுஜவேளற்புதனே
சித்தனுருகொண்டஞான
  சின்மயானந்தகுகா
முத்திதருந்தற்பொருளே
  மும்மயனுமான திரு
சத்திவடிவேல்கரனே
  தற்காப்பாயிவ்வேளை (7)

நான்மறையறு நாலும்
    நற்புவியுமேவுயர்வி
வானகத்திலுள்ளமரர்
    வணங்கப்பெற்றவுத்தமனே
மான்மகளுமென்றவெழில்
    மங்கைவள்ளியாளீந்த
தேன்மாவையுண்டவனே
    தேகிவரமீவாயே (8)

மிஞ்சும்பஞ்சபூதமொன்றாய்
    மீதமாயுன்னடியை
தஞ்சங்கொண்டதாஸனென்னை
    தற்காப்பதுன்கடமை
வஞ்சகத்தைக்கொள்ளாதே
    வணங்கினேன்றள்ளாதே
குஞ்சாணிலையாவென்
    குறைதீர்ப்பாயிவ்வேளை. (9)

ஐயாநின்னடிமையெனை
    ஆதரிக்கவேளையிதே
மெய்யாகத்தானுரைத்தும்
    மேவினேன்நின்னெதிரில்

சையோகமானந்த
  சாயல்குறவள்ளிபாகா
கையாறுரெண்டுகொண்ட
  கந்தாகண்பார்ப்பாயே. (10)

சுத்தநிற்குணமான
  சுப்ரமண்யாநின்செயலை
பற்றிப்பகர்ந்துவரப்
  பாக்கியமேபோதாதே
எத்தனையோநின்காதுக்
  கெடுத்துரைக்குமென்குறைகள்
அத்தனையுந்தீர்த்தருளி
  ஆதரிப்பாய்வேலோனே. (11)

சொக்கனார்தன்புதல்வா
  ஸொர்க்கமனைக்காதிபனே
பக்கமிருமங்கையரின்
  பதியானவேள்மயனே
மிக்கமுனியோகிதொழும்
  மும்மூர்த்திதற்பொருளே
மக்கள்முகங்கண்டிரங்கி
  மகிழ்ந்துந்துணையாவாயே (12)

பாண்டியனார்புதல்விசுதா
பத்தர்பரிபாலகனே
ஆண்டிபரதேசிவுரு
வானமயில்வாகனனே
தீண்டும்நவக்கிரகக்கொடுந்
தீதறுப்பதுன்கடமை
வேண்டும்வரமீயவிது
வேளையேவேலோனே (13)

ஆதாரமுன்றுதியை
யனுதினமுமோதிவுந்தன்
பாதாரவிந்தமதைப்
பற்றியதென்வன்முறைஐய
காதாரக்கேட்டுமின்னுங்
கருணைசெய்யாதொப்பாதே
தீதாறக்கோருமென்பாற்
திரும்புவாய்வேலோனே (14)

கந்தாகடம்பாவேள்
கார்த்திகேயாமாமயிலா

சிந்தூராசெங்கதிரா
  சின்மயாசெஞ்சுடரோ
ஸந்தானஸேனைபதி
  சரவணபவானந்தனே
வந்தாதரித்துவேகம்
  வரமீவாய்வேலோனே (15)

ஆளையாவெனக்குதவி
  ஆறுமுகாநீயலவோ
நேரையாபொற்கழலை
  நேமமாய்ப்போற்றுமென்னை
பாரையாகருணையுடன்
  பத்தனென்கண்மறைவை
தீரையாயிவ்வேளை
  திருச்செந்தூராதிபனே (16)

செங்கைமழுவையுண்டோன்
  செஞ்சடையோன்றன்புதல்வா
பங்கைமலர்பொற்கமலா
  பரிமளானந்தையனே
திங்கள்வொளிவதனு

தீனாபிமானுகண்
சங்கடமகற்றுவாயே
சண்முகாஸற்குருவே (17)

பெருக்கவமார்செய்யும்
பெருந்தவத்தைத்தானுலைத்த
நெருக்கச்சமணர்களை
நேரிற்கழுவேற்றியதுன்
திருக்கமலத்துணைபெறவே
தினந்தொழுகுமென்முகமாய்
உருக்கமோடாதரிப்பாய்
வுத்தமாயிவ்வேளை (18)

பல்லாயிரத்துயிரைப்
படைத்தமுதையூட்டுவென்நீ
கல்லாயிருக்கச்சிற்றுன்
கருணைமனமொப்பாதே
பொல்லாத வென்றீதை
பொறுமையுடன்றுணகற்ற
உல்லாஸமயிலேறி
வுகந்தோடிவந்தருள்வாய் (19)

அண்டரிடாகற்ற
அவதரித்தவாறுமுகா
பண்டுளவென்றீதறுக்கப்
பரமதயாளற்புதனே
புண்டரீகன்றன்மருகா
புண்ணியநின்மேனியதை
கண்டுமனங்களிக்கக்
கண்துறப்பாய்வேலோனே (20)

சூர்படையோடுஞ்
சூழெரித்தவல்லவனே
வீரவாகுமுன்னுதித்த
விந்தைதிருவாறுமுகா
நாரிவள்ளி தெய்வானை
நாயகாநின்வடிவை
நேரிலேகண்டு தொழ
நேமிதேவந்தருள்வாய் (21)

ஆதியிலேநின்னடிமுன்
அமர்ந்துமுறைகூறிவரும்



பாதியிலேவிட்டமுனைப்
பரிதாபம்நீயறிந்தாய்
வீதியிலேபவனிவரும்
விமர்சைகண்டுகண் களிக்க
சோதியேயெனக்குவொளி
சோர்வன்றிநீ துறப்பாய் (22)

அன்னை தந்தைபந்துந் துணை
ஆனசிவசத்திமயா
உன்னையேதஞ்சமென்று
ஆழியனுமுற்றடிமை
என்னைபரிசோதிப்பதும்
யேற்கா தென்கண்கூசல்
தன்னைத்துறந்திடுவாய்
தயஞானபண்டிதனே (23)

மாசிமருவற்றதிரு
மங்களக்கோலானந்தனே
பாசபந்தமாம்பிறவி
பவம்நீக்குந்தத்துவனே

தேசுப்பிரகாசஞான
தேசிகக்குருபரனே
தாஸ னெனக்குமொளி
தருவாய் செந்தூரனே (24)

அண்டபிண்டம்பர்விவிசை
யமர்ந்தும்நிறைந்தகுகா
கொண்டலரக்கர்முடைக்
கொய் தொழித்தவல் தீரா
வண்டுருவையெடுத்தகார்
வண்ணன் திருமால் மருகா
தொண்டனென்முகமதைத்
தோணியே தந்தருள்வாய் (25)

மந்திரங்களி லுயர்வு
மகிமை சடாட்சரத்தை
அந்தரங்கமுள்ளடைக்கி
யனுதினமும் மஞ்சலித்தேன்
இந்திரன் மருகோனே
யீராறுகண்கரனே

சுந்தரக்குருபரனே
 சுகந்தருவாய் வேலோனே (26)

நித்திய னுந்ததத்துவனே
 நிர்மலனும் பொற்பதனே
சத்துருஸங்காரையனே
 ஸத்துச்சித்தானந்தனே
உத்தமியுமைபாலா
 வும்பருக்கனுகூலா
சித்திதருவாய் வேலா
 சிவசுப்பிரமண்ணியனே (27)

மாயாபிபரஞ்சமதில்
 மயங்கிடாவண்ணமுரு
கேயாநின் பொற்பாதந்
 தெவுனமாய்ப்போற்றருளே
சாயாமற்றுணிருந்தால்
 சண்முகா யென்செய்குவேன்
தூபாப்பிறப்பறுக்க
 வோங்காராந்செதியே (28)

இடும்பனுக்கேவலிடும்
ஈசனே நின்னடிமை
குடும்பந்தளிர்த்திலகக்
குமரனே நீ துணையாய்
உடும்புபோலுனைப்பிடித்தேன்
வுண்மை மொழி தானுரைத்தேன்
கடம்பமலர் தாரணியுங்
கந்தனே காத்தருள்வாய் (29)

கோலாகல முடைய
கோதைவள்ளி நாயகனே
மேலான நற்பதவி
மேவுந்தயவா றுதியே
நாலாவிதமுரைத்து
நாடும் வரங்கைக்கூட
வேலாயுதனேவுனை
வேண்டினேன் முன் வருவாய் (30)



முருகன் புகழ் பாமாலை முற்றிற்று.